(குறிப்பு) இது கல்லாதவரிடை வைதுஷ்யப்பிரஸங்கஞ்செய்யலாகாதென உடன்பாட்டானு மெதிர்மறைமுகத்தானுங் கூறுகின்றது. கல்லாதவர்-கல்வியறிவில்லாதவர். கட்டுரை-வைதுஷ்யப்பிரஸங்கம். 'பொல்லாமையில்லை' என்றது வேண்டாமையிற்றொன்றில்லையென்றவாறு. பின்னடியிரண்டும் ஒருபழமொழி. இது கட்டுரைவகையால் வந்தது. இது "ஒழுக்கத்தி னெய்துவர் மேன்மை யிழுக்கத்தி, னெய்துவ ரெய்தாப் பழி"* எனத் திருக்குறளினு மமைந்துள்ளது. இழுக்கம்-நெறியினீங்கியசெயல். ஒழுக்கம்-நெறிமுறையொழுகல். கல்லாதவரிடைக் கட்டுரை பயனில்கூற்றாய்ப் பயனிலசெய்யற்க வெனனும் நெறிவழிப்படாமையால் அது நெறியினீங்கியசெயலா மிழுக்கமாயிற்று. அது செய்யாமை பயனிலசெய்யாமையாகிய நெறிவழிப்பட்டமையா னொழுக்கமாயிற்று. 'ஆதலான்' என்றது கல்லாதவரிடைச்சொல்லுங்கட்டுரை யிழுக்கத்தின்பாற்படுதலாலும், அது செய்யாமை யொழுக்கத்தின்பாற்படுதலாலும் என்றவாறு. இது ஒருவர்க்கு அதனின்மிக்கதொரு பொல்லாமையில்லை என்று அன்வயத்தானும் வெதிரேகத்தானும் துணிதற்கு ஏதுவாசகமாயிற்று 'இழுக்கத்தின்மிக்கதோரிழிவுமில்லை' என்றது கல்லாதவரிடைக்கட்டுரைசொல்லுதல் தீதென வுடன்பாட்டாற்கூறுதற் கேதுவாயிற்று. 'ஒழுக்கத்தின்மிக்கதோருயர்வுமில்லை'யென்றது கல்லாதவரிடைக்கட்டுரைசொல்லாமையே நல்லது என எதிர்மறைமுகத்தாற்கூறுதற்கு ஏதுவாயிற்று. 'கல்வியாறுயகழிநுட்பம்'† என்றபாட்டு நூல்கற்க வருமாணாக்கர் அந்நூற்பொருள்கொள்ளற்கேற்றகல்வியிலராயிற் சொல்லலாகாதெனக் கற்பிப்போனை நோக்கியகூற்றாகையாலும், இப்பாட்டுக் கல்லாதாரவையுள் வைதுஷ்யப்பிரஸங்கஞ்செய்யலாகாதெனக் கோட்டிகொள்வாரைநோக்கிக்கூறிய கூற்றாகையாலும் இவை தம்முட் கூறியதுகூறலன்றென வுணர்க. இதனால், கற்றற்கு அதிகாரியமைவேண்டுவதுபோலக் **கேட்டற்கும்** அதிகாரியமைம் வேண்டுமென்பது பெறப்பட்டது. "ஒளியார்முனொள்ளியராதல்வெளியார்முன், வான்சுதைவண்ணங்கொளல்"‡ என்பதும் இக்கருத்துடையது.

65. வென்றடு கிற்பாரை வெப்பித் தவர்காய்வ
தொன்றோடு நின்று சிறியார் பலசெய்தல்
குன்றோடு தேன்கலா வெற்ப வதுபெரிது
நன்றோடு வந்ததொன் றன்று.

எ-து, வென்று தம்மைக் கொல்லவல்லாரை மனத்தைக்கொதிப்பித்தவர்வெகுள்வதொருகாரியத்தொடுநின்று எளியராய்ப் பல குற்றங்களைச்செய்தல், குவடுகளும் தேன்பொதிகளும் தம்முள் விரவிநெருங்கிய வெற்பையுடையானே! மிகவும் அது தனக்கு நன்றொடுவந்ததன்று எ-று. குற்றென்பதும் வரும்.

* திருக்குறள், 14-வது அதிகாரம் (ஒழுக்கமுடைமை) குறள்-7.
† இந்நூலின் மூன்றாஞ்செய்யுள்.
‡ திருக்குறள் 72-ஆம் அதிகாரம (அவையறிதல்) குறள்—4.

(குறிப்பு) இது வலிமிக்க அரசரை அவரினெளியராயினர் அவமதிக்கலாகாதென்பது கூறுகின்றது. 'வென்று தம்மைக் கொல்லவல்லாரை' யென்றது போர்நேர்ந்துழித் தம்மை வெல்லவுங் கொல்லவும்வல்ல வலிமிக்கஅரசரை யென்றவாறு. 'மனத்தைக்கொதிப்பித்து' என்றது அவர்க்குச் சொல்லானுஞ் செயலாலுஞ்செய்யககடவமரியாதைகளைச்செய்யா தபேக்ஷிக்கும் அவமதிப்பால் அவர்மனம் புழுங்குமாறுசெய்து என்றவாறு. 'அவர் வெகுள்வதொருகாரியதொடங்கின்று' என்றது அவர் வெகுள்வதாகிய பிரதிகூலமொன்றேயன்றிப் பிறிதொருபயனுமில்லையாக வென்றவாறு. 'எளியராய்' என்றது அவர் வெகுண்டால்வருந்தீங்கு தாங்கமாட்டாதாராய் என்றபடி. 'பலகுற்றங்களைச் செய்தல்' என்றது முன்செய்தது பராக்கிரமலன்றென்றெண்ணுமாறு குற்றங்களைத தொடர்ந்துசெய்தல் எனறவாறு. 'நன்றுமேவந்தொன்றன்று' என்றது தீங்குடையவாகும் என்னும் பழமொழிப்பொருள்கொடுத்து முடித்துக் காட்டியவாறு. பெரியாரையவமதிக்குஞ் சிறியாரை யிடித்துரைக்குமிடத்து அச் சிறியார்செய்யுஞ்செயலைச்சுட்டி இது "நல்லதொருபட்டதில்லை" என வழங்கும அடிப்பட்டவழககே இப்பாட்டிற்கு எடுத்துக்கொண்டபழமொழி யெனவறிக. உரை முடிந்தபிறகு குற்றென்பதும்வரும் என்றெழுதப்பட்டிருப்பது ஆராயததக்கது; குன்றென்பதும்வரும என்பது பிரதிபேதம்.

66. முன்னின்னா ராயினு மூடு மிடர்வநதாற்
பின்னின்னா ராகிப் பிரியா ரொருகுடியார்
பொன்னுச செயினும் புகாஅர் புனலூர
துன்னினா ரல்லர் பிறர்.

எ-து, முன்பு ஒருகாரணததால இன்னாராயினும் தம்மைமுழுக்கும இடர்வந்தாற் பின் இன்னாராகிப் பிரியாதேபொருந்துவர் ஒரு குடிபபிறநதார்; பொன்னுகப பிறரைசசெய்யினுமபிறர் தமக்கோரிடர் வந்தால அவ்விடத்தின்வந்துபுகுதார்; புனலூரனே! ஒருகுடிப்பிறவாதார் துன்னினாரல்லராகலான் எ-று.

(குறிப்பு) இது சுற்றததார்துணை சிறந்ததென்பதுகூறுகின்றது. 'முன்பொருகாரணத்தால்' என்றது தம்மைமுழுகுமிடாவருதற்குமுன்பு தாயமுதலிய யாதேனுமொருகாரணத்தால் என்றவாறு. 'இன்னாராயினு' மென்றது ஒருவர்க்கொருவர் இனிமையற்ற பகைவராயிருப்பினு மென்றவாறு. உம்மை காரணமுள்ளவழியு மின்னாராகாரென்பது குறித்துநின்றது. 'தம்மைமுழுக்கு மிடர்வந்தால்' என்றது தம்முள் யாரேனும் ஒருவரையாயினும், இருவரையுமாயினும் அழுந்தச்செய்யுங்கேடு வருவதாயிருப்பின என்றவாறு. 'பின்னின்னாரகி' என்றது உடனே ஒருவர்க்கொருவர் இனிமையுடைய நட்பினராய் என்ற

வாறு. 'பிரியாதேபொருந்துவர்' என்றது வேற்றுமையின்றி யொன்றுபடுவர் என்றவாறு. 'ஒருகுடிப்பிறந்தார்'-குடிப்பிறப்புடைய ஒருகுலத்திற் பிறந்தவர். மூன்றுமடி பழமொழிக்கூற்று. 'பொன்னாகப் பிறரைச்செயினும்' என்றது தம் மோடொருகுலத்திற்பிறவாதபிறரைப்பொன்மிக்குடையராகச்செய்துவைப்பினு மென்றவாறு. பிறர் என்றது அங்ஙனம செய்துவைகைப்பெற்ற பிறராகிய அவர் என்றவாறு. தமக்கென்றது,அப்பிறரைப்பொன்மிகுடையராகச்செய்துவைத்த தமக்கே என்றவாறு. 'வந்துபுகுதார்' என்றது வந்து துணைசெய்யாது விலகி நிற்பர் என்றவாறு. துணனிறரல்லர் பிறர் என்றதனைப் பிறர் துன்னிறரல் லர் எனக்கூட்டிப் பழமொழிப்பொருளைசசாதிததற் கேதுவாக்கி 'ஒருகுடிப் பிறவாதார துணனிறரல்லராகலான்'எனப பொருளுரைககப்பட்டது. "பொன் னுச்செய்தாலும் பொருந்தார் பொருந்துவரோ" எனப திதன்பழமொழி. ஒருகுலததார்கட் பொழிககறபாற்றன்றென்பது கருதது.

67. சுற்றததார் நட்டா ரெனசசென் றொருவரை
யறறததாற் றேறு றறிவுடையார்—கொற்றபுள்
ளூாநதுலகந தாவிண வண்ணமே யாயினுஞ்
சீர்ந்தது செய்யாதா ரில.

எ-து, சுற்றததாரென்றும் நட்டாரெனறுங்கொண்டு ஒருவரை மறைததுசசெய்யுங்காரியததின்கண் அறிவுடையாா தேறுா; வெற்றி யையுடைய புள்ளையூாவதுஞசெய்து உலகததைக் காலாற்கடபபதுஞ செய்த உயர்ந்தமுதலவனேயாயினும, தனக்குச சீாக்கபபெற்ற தொன்றை ஒழியவிடுவாரில்லை எ-று. தனபபேறு சிரிதாயிருநததாயிற பழியும்பாவமும்பாராதே யாவராயினும மனநதிரிநதுவெளவுவர் எ-று.

(குறிப்பு) இது, பிறவுறியிற் பொருட்பேறறை அவா தமதாககிககோடற் குரிய சீரியகாரியத்தி லொருவரையும நமபலாகாதெனகின்றது. 'சுற்றத்தா ரென்றும நட்டாரெனறுமகொண்டு' என்றது இவா நம சுற்றததாராதலால் நமக கனுகூலம்செய்வரெனறேனும, இவர் நட்டாராதலால் நமக் கனுகூலம செய்வரென்றேனும மனததுடகொண்டெனறவாறு. 'ஒருவரை' என்றது தானல்லாத பிறரொருவரையும எனறவாறு. விகாரததாற்மெருக்கமுற்றுமமையை விரிததுரைத்துக்கொளக. அற்றம்-பிறரறியாது மறைககததக்குவது அற்றததால் என்றது வேற்றுமைமயக்கமாதலால 'ஒருவரை மறைததுசசெய்யுஙகாரியததின் கண்' எனப் பொருளுரைககப்பட்டது மறைததுசசெய்யுஙகாரியமாவது:— பிறிதொருதுணையும்வேண்டாது தனியேமுயல வெளிறினெய்தும பொருட் பேற்றினைத் தன்னதாக்கிககொள்ளற்குரிய காரியம். 'அறிவுடையார் தேறுா'

என்றது அக்காரியவிஷயத்தில் அறிவுடையோர் தெரிந்தெடுக்கமாட்டார் என்றவாறு. 'வென்றியையுடைய புள்ளையூர்வதுஞ்செய்து' என்றது இந்திராதி தேவர்களெல்லாரையும்வென்று, அண்ணலாகிய தன்னினும் வரத்தா லுயர்வு பெற்ற கலுழனைத் தனக்கு ஊர்தியாககொண்டதுமேயன்றி யென்றவாறு. 'உலகத்தைக் காலாற்கடப்பதுஞ்செய்த' வென்றது எல்லாமுடையனை என்றபடி. இத்தொடர் இக்கருத்துடையதென்பதை "அடியளந்தான் றாஅய தெல்லா மொருங்கு"*என்பதனானுமறிக. 'உயர்ந்தமுதல்வனேயாயினு'மென்றது முதல்வராயுள்ளாருட் டலைவனேயாயினு மென்றவாறு. இதனை,'முதலாவார் மூவ ரம் மூவ ருள்ளும், முதலாவான மூரிநீர் வண்ணன்'†என்பதனானுமறிக. 'தனக்குச் சீர்க்கப்பெற்றதொன்றை'யென்றது தன்னதாக வெளிதிற்கொள்ளத்தகுவதாய் வாய்க்கப்பெற்றதொன்றை யென்றவாறு 'ஒழியவிடுவாரில்லை' யென்றது ஒழிய விடுவாரொருவருமில்லையாகலாலயாரும் தமமதாகக் கைப்பற்றிக்கொள்வரென்றவாறு சீரந்தது-மெலித்தலவிகாரம அண்ணலேயாயினும்அசசுற்றத்தார் நட்டார் சீர்ந்தது செய்யாதாரில் எனப் பழமைவினைகேற்ற எழுவாய் விரித்துமுடித்துக் கொளக. 'தனப்பேறு சிசிகாயிருந்ததாயிற் பழியும் பாவமும் பாராதே யாவ ராயினுமமனந்திரிந்து வெளவுவா' எனறது 'சீர்ந்ததுசெய்யாதாரில' என்ற பழமொழிப்பொருளை விரித்துரைததவாறு. யாநும் 'வாய்த்ததை விடமாட்டார்' எனனுமஅடிப்பட்டவழககேஇப்பாட்டிற் கெடுததுக்கொண்டபழமொழிபோலும.

68. எனைப்பலவே யாயினுஞ் சேய்ததாப் பெறலிற்
றினைததுணையே யானு மணிக்கோட னன்றே
யினைக்கலை தேன்கிழிககு மெற்கலசூழ் வெற்ப
பனைப்பதித துண்ணார் பழும.

எ-து, எததுணைப் பலவாயினும் காலநெடிதுசென்றுற் பெறுமத னிற் றினையளவேயாயினும் அணித்தாகவொருபொருளைப்பெற்றுத் தான்கோடல மிகவும நன்று; இனக்கலைகள் தேன்பொதிகளைக் கிழிக்கும் பிறங்கியகற்கள்சூழ்நதவெற்பனே ! பனையைநட்டு அப்பனைபழுத்தாற் பழமுண்போமென்றிருப்பார் ஒருவருமில்லை எ-று.

(குறிப்பு) இது சூசிகடாஹந்யாயத்தாற் சேய்மைக்கட் பெரும்பயனுறு முயற்சியினும் அண்மைக்கட் சிறுபயனுறுமுயற்சி சிறந்ததென்பது கூறுகின்றது. 'எததுணைப்பலவாயினு' மென்றது பனையளவான் மிக்கபலவாயினும் என்றபடி. 'காலநெடிதுசென்றுற் பெறுமதனின்' என்றது நெடுங்காலமுயன்று சென்றுற் பெறலாம்பயனாகிய அம் மிகப்பலவாகியபொருளினும் என்றவாறு

* திருக்குறள், 61-ம் அதிகாரம் (மடியின்மை) குறள்-10.
† நாலாயிர திவ்யப்பிரபந்தம் இயற்பா முதற்றிருவந்தாதி, பாசுரம்-15.

'இளையளவேயாயினு மணித்தாக வொருபொருளைப்பெற்றுத் தான்கோடல் மிகவும்நன்று' என்றது சிற்றஞ்சிறுகாலேமுயல உடனேகிடைக்கும்பொருள் அளவான் மிகச்சிறிதாயிருப்பினும் அதனையே கைக்கொள்ளுதல் மிக நன்றென்றவாறு. அணித்துக்கோடல் என்பது அணிக்கோடல் எனக் கடைக்குறையாயிற்று. அணித்தாகக்கொள்ளுதல் என்பது பொருள். 'இனக்கலைக டேன் பொதிகளைக்கிழிக்கும்'என்றது தம்மினங்களுடன் கூடிய ஆண்குரங்குகள் தேனிறால்களைப்பிய்த்து இனங்களையூட்டித் தாமுமுண்ணுகின்றனஎன்றவாறு. பிறங்கிய கற்கள்-விளக்கமுள்ள சிறுகுன்றுகள். பனைப்பதித்துண்ணார்பழமென்பது பழமொழிக்கூற்று. 'பனையையாட்டு, அப்பனைபழுத்தாற் பழமுண்போமென்றிருப்பாரொருவருமில்லை' என்றது பசியுடையராய் அப்பசிதீரப் பனம்பழமுண்ணும் வேணவாவுடையாரெவரும், எளியமுயற்சியிற் கிடைப்பதொரு பனம்பழத்தைத் தேடியுண்டு பசிதீராது, அதன் கொட்டைதேடிக்கொணர்ந்தூன்றித் தண்ணீர் வார்த்து வளர்த்துவந்து அது பனைமரமாயப் பின் காய்த்துப் பழுக்கும் மிக்க பழங்களை நுகர்வேமென் றெதிர்பார்த்திரார் என்றபடி."பசித்துண்ணவேண்டிப் பனைநடுவோருண்டோ" என்ப திதன்பழமொழி. இப்பொருள்பற்றி நாளைக் கிடைக்கும் பலாப்பழத்தைக்காட்டிலும் இன்றுகிடைக்குங் களாப்பழம் நல்லது என்வும ஒருபழமொழி வழங்குவதுண்டு.

69: தந்தம் பொருளுந் தமர்தம் வளமையு
முந்துற நாடிப் புறந்தர லோம்புக
வந்த வருவி மலைநாட சேணுக்கி
நந்துநீர் கொண்டதே போன்று.

எ-து, தந்தமது பொருளினதளவினையும், தமர்கள்செல்வத்தினளவினையும் முந்துறவே ஆராய்ந்தறிநது உய்தற்குததக்கவகை புறந்தருதற் பொருளைப் பொருள்செய்து பாதுகாக்க; அந்தணருவிமலைநாடனே! பின் தனக்கு நீர்பெறலாங் காலநெடுமையைப்பார்தது நந்து நீரைத் தாங்கியதுபோல எ-று.

(குறிப்பு) இது ஈட்டியபொருளை வீண்செலவுசெய்யாது சிக்கனவுடையராய் வைதது வாழவேண்டுமென்கின்றது. 'தந்தமதுபொருளினதளவினையும'என்றது ஒவ்வொருவரும தம்மாலீட்டப்பட்டுள்ள பொருளினதுஅளவு இததுணையென்பதையும் என்றவாறு 'தமர்கள்செல்வததினளவினையும்' என்றது தம்மாற் பாதுகாக்கததக்க இருமுதுகுரவரும மனைவியும மககளும் ஏவலாளரும் மற்றுந தமமைப்பற்றிய சுற்றததாரும் உண்டுடுத்தணியவேண்டும்பொருள்களும் அவற்றிற் குபகரணங்களுமாகச் செலவுசெய்யவேண்டும்பொருளினளவையும் என்றவாறு. முந்துறவாய்ந்தறிதலாவது செலவிட்டுவாழவேண்டும் பிற்றைஞான்றின் முற்பட்டே அவ்விருவகையளவையும் சீர்தூக்கியறிதல்.

'உய்தற்குத்தக்கவகை புறந்தருதற்பொருளைப் பொருள்செய்துபாதுகாக்க'வென்றது,தம்பொருளினளவுசிறிதாயின் தாமுந் தமருமுய்யாவாழுமாறு பாதுகாப்பிற்கு வைத்திருக்கும் அப்பொருளைப் பிறிதொருசெலவும்செய்யாது சிக்கெனவுடையராய்ப் பாதுகாத்துவாழவேண்டுமென்றவாறு. "சேணோக்கி நந்துநீர்கொண்டதே போன்று" என்பது பழமொழிக்கூற்று லுதாரணங்காட்டியவாறு. 'பின் றனக்கு நீர்பெறலாங் காலநெடுமையைப்பார்த்து நந்து நீரைததாங்கியதுபோல' என்றது நத்தை தன்கூட்டினுள்ளே பனிககாலததிலீட்டிவைத்தநீரைத் தான் வீண்விரயஞ்செய்யாது காற்றூலுஞ் சூட்டாலுஞ் சுவறவிடாது புதர்நிழற்பசுமரங்களினொட்டிக் கூட்டின்வாயைமூடி மிககசிக்கெனவுடையதாய் மாரிக்காலத்தளவும் வைததருந்தி வாழுமாறுபோல என்றவாறு. இதனால், சுருங்கியபொருளுடையார் அப்பொருளைத தீயர்கவர்ந்துகொள்ளவிடாது தண்ணளியுடையோரான வலியோர்சார்புபற்றிச் சேமிததுவைததுக்கொண்டு சிககெனவுடையராய் நுகர்ந்து வாழவேண்டுமென்பது குறிப்பாயிறறு இதன்பழமொழிச்சொரூபம் வழக்குஞ் செய்யுளுநோக்கி வந்துழிக் கண்டுகொளக.

70. சிறியவ ரெய்திய செல்வத்தின் மாண்பு
பெரியவா நல்குரவு நன்றே—தெரியின்
மதுமயங்கு பூங்கோதை மாணிழாய் மோரின்
முதுநெய் தீதாகலோ வில.

எ-து, கீழ்மக்கள்பெற்றசெல்வததின் மாட்சிமைப்பட்ட பெரியோர்பெற்றவறுமை உலகததுப் பயன்படும்; ஆராய்வேமாயின், தேன் மிடைந்த பூங்கோதையையுடைய மாணிழாய்! மோர்போலப் பழைய நெய் தீதாகமாட்டாது; நன்றேயாம அதுபோல எ-று.

(குறிப்பு) இது வினைத்தூய்மையின் உயர்வுகூறுகிறது. 'கீழ்மக்கள் பெற்றசெலவததின்' என்றது பழிபாவங்களையஞ்சாது பொருளொன்றையே கருதிய கீழ்மக்கள் தீநெறியிலீட்டிய நிறைசெல்வத்தைக்காட்டிலும் என்றவாறு. 'மாட்சிமைப்பட்டபெரியோர்பெற்றவறுமை யுலகத்துப்பயன்படும்; ஆராய்வேமாயின்' என்றது அங்ஙனமீட்டாமையாற் பொருள்வரவின்றி நெறிநின்றபெரியோர்க்கு வறுமைவருமாயினும அது ஆராயுமிடதது உலகிற் கொழுக்கநடையைக்காட்டி அதனை வலியுறுத்திப் பயன்படுமென்றுதோன்றுதலால் அது மிக நன்றென்றவாறு. 'தேன்மிடைந்தபூங்கோதையையுடையமாணிழாய்' என்றது (மகடூஉ முன்னிலை) வண்டுகள்மொய்க்கும் பூச்சூட்டணிந்தகூந்தலினையும் சிறந்த அணிகலங்களையுமுடையாய் என்றவாறு. உரையில் 'மோர்போல' என்றது மோரின் என்றிருக்கவேண்டும். மோரைக்காட்டிலும் என்றவாறு. 'பழையநெய்

தீதாகமாட்டா'தென்றது (புதிதாய்ப்பெருகியுள்ளமோரைக்காட்டிலும்) பழைய தாய்ச்சுருங்கியுள்ளநெய் தீதாகாது நன்றாகுமென்றவாறு. அதனினும் புதிய நெய் மிகவுநன்றாகுமென்பது சொல்லாமையேபெறப்பட்டமையால் அதனுபமேயமாகிய பெரியவரெய்தியசெல்வம் மிகவு நன்றாகுமென்பதும் குறிப்பாயிற்று. இதன்பழமொழியின்சொரூபம் வழக்குநோக்கி வந்துழிக்காண்க. இப்பாட்டின் கருத்து, "பழிமலைந் தெய்திய வாக்கத்திற் சான்றோர், கழிநல் குரவே தலை"* எனத் திருக்குறளிலுமுள்ளது. பாவமும் பழியுமுண்டாகச் சிறியராயினாரீட்டுஞ் செல்வத்திரட்சியினும் அங்ஙனமீட்டாமையால் நெறியினின்றபெரியார் வறுமையுறினும் அது சிறந்ததென்றமையாற் பொருளை நன்னெறியினின்றேயீட்டவேண்டுமென்பது குறிப்பாயிற்று

71\. வன்பாட் டவர்பகை கொள்ளினு மேலாயார்
புன்பாட் டவர்பகை கோடல் பயமின்றே
கண்பாட்ட பூங்காவிக் கானலந் தண்சேர்ப்ப
வெண்பாட்டம் வெள்ளந் தரும்.

எ-து, வலியதகைமையையுடையாரொடு பகைகொள்ளினும் மேலாயார் எளியதகைமையையுடையாரோடு பகைகோடல் ஒருபயனும் படாது; கண்களின்றகைமையாயுள்ள பூங்குவளைகளையுடைய கானலந் தண்சேர்ப்பனே! பருவமழையன்றியே வெண்பாட்டமும் வெள்ளந்தருமாதலா னென்றவாறு.

(குறிப்பு) இது ஒருவரோடும் பகைகொண்டு மேற்செல்லலாகாதென்கிறது. 'வலியதகைமையையுடையாரொடு பகைகொள்ளினும்' என்றது அறிவு ஆண்மை பெருமை என்னும் மூவகையாற்றலாலுந் தம்மின்வலியராயினாரோடு மாறுபட்டு மேற்செல்லினும் செல்லுக என்றவாறு. உம்மையால் அதுவுங்கூடாதென்பது கருத்தாயிற்று. 'மேலாயார்' என்றது அவ்வாற்றலான்மிக்காராயினாரென்றவாறு. 'எளியதகைமையையுடையாரோடுபகைகோடல் ஒருபயனும்படாது' என்றது அவ்வாற்றலா விழிந்தாரோடு மாறுபட்டுமேற்செல்லல் கூடாதென்றபடி. வலியார்மேற்செல்லின் ஒரோவழி அவர் இவரது எளிமையையும் அறிவின்மையையுமுணர்ந்து பிழைப்பிற்குத் தகவொறுத்து அறிவுறுத்திவிட உய்தலுங்கூடுமாதலால் வன்பாட்டவர்பகைகொள்ளினுங்கொள்க என்றும் எளியோர்மேற்செல்லின் அவர் தாமொருவாற்றானும் இவர்க்குய்தல் அரிதென்றுணிந்து பலதீங்குகளும் ஒருங்குபுரிவராதலாலும் அவற்றிற்கெல்லாமஞ்சாது அவரைக்கொல்லினும் பழியும் பாவமுமெய்துதலானும் அது பயமின்றென்றுங்

* திருக்குறள் 66-ஆம் அதிகாரம். (வினைத்தூய்மை) குறள்—7.

கூறப்பட்டன. பயமின்றென்றது செய்யலாகாதென்றபடி. 'கண்களின்றகைமையாயுள்ள' என்றது மகளிர்கண்களின் றகைமைபோலுந் தகைமையையுடைய என்றவாறு. இது பூவிற்கு அடையாயிற்று. 'பூங்குவளை' பூக்களையுடைய குவளை. கானல்-கழிக்கரைசசோலை. "வெண்பாட்டம் வெள்ளந்தரும்" என்பது பழமொழிககூற்று. இதனுள் வெண்மை கருமையின்மறுதலையாய்ப் பாட்டத்தை விசேடித்தலால் வெண்பாட்டமென்றது கார்காலமல்லாத வேனிற்காலத்துப் பெய்யும் மழையை யுணர்த்திற்று. பாட்டம்-மழைபெயல். பாட்டமும் என்னும் உம்மை விகாரததாற்றொக்கது 'பருவமழையன்றியே வெண்பாட்டமும் வெள ளந்தருமாதலான்' என்றது கார்காலததுமழையேவெள்ளந்தருமென்றெண்ணற்க; வேனிற்காலததுமழையும வெளளந்தருமாதலால் அதனமேலும் செல்லலாகா தென்றவாறு. அதன்மேலும செல்லலாகாதென்பது பொருட்குறிப்பாற்பெறப் பட்டது. வெள்ளநதருதல்-நீரைப்பொழிதல். இது எடுத்துக்காட்டாதலால் 'ஆதலானென்றவாறு' என்றது ஆதலான் அதுபோலவென்றவாறு என்றிருகக வேண்டும். பருவமழை ஒழியாதுநின்றுபொழிதலால வலிமிகுடையதும, வெண் பாட்டம சிறிதுபொழுதுபெயதொழிதலால வலியில்லதுமாகிய வேறுபாடுடைய வாயினும அவற்றைமதியாது எதிரததுச்செல்வார் அவற்றின அம்புமாரியாற் றுக் குறுதல ஒருதலையானெயதுவா. அவற்றுட் பருவமழையிற்செல்வார், இடி, ஆலி, சுழிகாற்று முதலியவற்றால வாதையிலலாமையும், வெண்பாட்டததிற்செலவார் இடிமுதலியவறறால் வாதையுறுதலும எய்துவராதலாற் பருவமழையிற் செல்லுத லினும வெண்பாட்டததிற்செல்லுதல தீதாவதுபோல, வலியாரும் எளியாரும் வலியால்வேறுபாடும், தம்மையெதிர்ப்பார்மேல் அம்புமாரிபெய்தலால் ஒப்புமையும் உடையராயினும, வலியராயினா எளியார்மேன் மிக்கசினங்கொள்ளாது அவர் அடங்குமளவே போர்புரிவராதலாலும்,எளியராயினர் தமக்கு உய்யுமாறில்லாமை யாற் றமமேலெதிர்ததுவரும் வலியாரை யிலலையெனச்செய்யக்கருதி மிக்கசீற்றங் கொண்டு தாஙகவொண்ணாதபலதீங்குகளைச்செய்து கொல்லததுணிவராதலாலும வலியார்மேற்செல்லுதலினும் எளியார்மேற்செல்லுதல் தீதாகுமெனத் திட்டாந் ததொடு பொருததியுரைத்துக்கொள்க. இப்பாட்டிற்சொல்லப்பட்டபகை ஆக் கிரமணம என்னும மேற்செலவும, "வலியார்ககு மாறேற்ற லோம்புக வோம்பா, மெலியார்மேன் மேக பகை"* எனனுங் குறளிற் சொல்லப்பட்டபகை தற்காப் பின்பொருட்டு எதிரததலுமாகிய வேறுபாடுடைமையால் இஃது அககுறளொடு மாறுபடாதென உணர்க. இப்பாட்டிற்கு எடுத்துக்கொண்ட பழமொழியின்வடி வம் வழககும் செய்யுளும்நோககி வநதுழிக் கண்டுகொள்க. எளியாரைப் பகை யாக்கிக்கொள்ளலாகாதென்னும் நீதியை நரியேதிர்த்தாற் சிங்கம் என்னுந் தொடர்மொழியால் நாட்டார்வழங்குகின்றனர்.

* திருககுறள் 87-ம் அதிகாரம் (பகைமாட்சி) குறள்—1.

72. நடலை யிலராகி நன்றுணரா ராய
முடலை முழுமக்கண் மொய்கொ ளவையு
ளுடலா வொருவற் குறுதி யுரைத்தல்
கடலுளான் மாவடித் தற்று.

**எ-து,** மனத்தின்கட் கவலையிலராய் நன்மையறியாராகிய மனம் வலிய முழுமக்கண்மொய்கொண்டவவையின்கணிருந்தவொருவற்கு அறிவிற்குடலாகிய வுறுதியாயினவற்றையுரைத்தல் கடலுள்ளே மாங் கனியைவடித்தாற்போலும் என்றவாறு.

(குறிப்பு) இது நல்லோரல்லாதார் கூட்டத்துள்ள ஒருவனுக்குச் சாஸ்த்ரார்த்தஸாரமங்களான தத்வஹிதபுருஷார்த்தங்களை உபதேசிக்கலாகாதென்கிறது. 'மனத்தின்கட்கவலையிலராய்' என்றது விசாரமற்றசிந்தையராய் என்றபடி. விசாரமாவது பிறப் பிறப்புப் பிணி மூப்பு வறுமைகளின் றுன்பமுணர்ந்து அவற்றிற்கஞ்சி அவைதீரும்வாயில் நாடுதல். 'நன்மையறியாராகிய' என்றது இவை தமக்கு நன்மையாயின; இவை தமக்குத் தீமையாயின எனப் பகுத்துணர்ந்து நன்மையாகிய ஒழுக்கங்களை விரும்பாதவராகிய என்றவாறு. 'மனமவலியமுழுமக்கள்' என்றது அன்பு, விருப்பம், அச்சம், பச்சாத்தாபம் முதலிய மனநெகிழ்ச்சியோடுகூடிய குணங்களொன்றுமின்றி, அம்மனம் வலியடைந்திறுகுதற்குரிய வெறுப்பு, தறுகண், களிப்பு முதலிய துர்க்குணங்களையுடைய அறிவிலாமக்கள் என்றபடி. முடலை-வலிமை. இங்கு முழுமை-திருத்தப்படாமையுணர்கின்றது; முழுமரமென்புழிப்போல. மொய்கொளவையுள் ஒருவற்குடலாவுறுதியுரைத்தல் எனக் கூட்டுக. உடலாவுறுதி-வினைத்தொகை. ஒருவற்கு என்பது இடைப்பிறவரல். 'மொய்கொண்டவவையின்கணிருந்தவொருவற்கு' என்றது கொச்சைமக்களாதலால் ஆட்டுமந்தைபோலத் திரண்டகுழுவிலுள்ள ஒருவனுக்கு என்றபடி. ஒருவனுக்குரைத்தலே கூடாதென்றமையால் எல்லோர்க்கு முரைத்தல் கூடாதென்பது சொல்லவேண்டாதாயிற்று. 'அறிவிற்குடலாகிய வுறுதியாயினவற்றையுரைத்தல்' என்றது ஞாதவ்வியங்களான தத்வ*ஹித†புருஷார்த்தங்களை‡யுபதேசித்தல் என்றவாறு. உடல்-இங்கு இலக்கணையால் அங்கவாசகமாயிற்று. அறிவிற்கு விடயங்கள் அங்கமாகையால் அங்ஙனங்கூறினர். 'கடலுள்ளே மாங்கனியை வடித்தாற்போலும்' என்றது உவர்க்கடலுள் ஒருதுளி

---

* தத்துவம், "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின், வகைதெரிவான் கட்டே யுலகு" (திருக்குறள் 3-வது அதி. நீத்தார்பெருமை குறள்—7) என்னுங் குறளாற் சொல்லப்பட்டவை.

† ஹிதம், தீயனவொழித்து நல்லனசெய்தல்.

‡ புருஷார்த்தம அறம் பொரு ளின்பம் வீடெனபன.

நீரில் அது இன்சுவையெய்தற்பொருட்டு ஒரு தேமாங்கனியைப் பிழிந்தாற் போலும் என்றவாறு. தேமாங்கனிரசம் பிழியப்பெற்ற உவர்க்கடலின் நீர்த்துளியானது, அதன்கணுள்ள பிறநீர்த்துளிகளின் கூட்டரவால் இன்சுவையெய்தாதொழிந்து திருந்தாதவாறுபோல முடலைமுழுமகன்கண்மொய்கொளவையுள்ளானொருவனுக்கு உறுதிப்பொருளை யுபதேசிப்பினும் அக்குழுவினுள்ளார்கூட்டரவால அவன் அதனை யுளத்துட்கொள்ளாதொழிதலால் அவன் ஒருநாளுந்திருந்தான் எனக் கருத்துநோக்கி யுவமையொடுபொருத்தி யுரைத்துக்கொள்க. "கடலுளானமாவடித்தற்று" என்பது பழமொழிக்கூற்று. இது ஒப்புமைவகையால் வியர்த்தம் என்னும் பொருட்குறிப்புடையதாய்ப் "பன்றிக்கூழ்ப் பத்தரிற் றேமா வடித்தற்று"* என நாலடியுள்ளும், "ஆற்றிற்கரைத்தபுளியாக்கிடாமலென்னன்பையெல்லாம்" எனத் திருவேகம்பமாலையினும்† வழங்கப்பட்டது. சமுத்திரத்திற் பெருங்காயம் கரைத்தாற்போலும் என்பது சாமானியவழக்கு.

73. யானுமற் றிவ்விருந்த வெம்முனு மாயக்கால்
வீரஞ் செயக்கிடந்த தில்லென்று கூடிப்
படைமாறு கொள்ளப் பகைதூண்ட லல்லதே
யிடைநாயிற் கென்பிடு மாறு.

எ-து, யானும் இவ்விடத்திருந்த வென்முன்னோனுமாக வொரு வினைசெய்யத்தொடங்கியக்காற் பகைவரால் வீரஞ்செயக்கிடந்த தொன்றுமில்லையென்றுசொல்லிப் பிறருந் தம்மோடுகூடிப் படைத் தொழிலின்கண் மாறுகொள்ளும்வகை பகையைமிகச்சொல்லுதலாகிய வது ஆடுகாத்துக்கிடக்கும் இடையர்நாய்க்குக் கள்ளர் எலும்பிடுமாறு போலு மென்றவாறு.

(குறிப்பு) இது வலிமிக்கபகைவரை அடுத்துக்கெடுக்குமாறும், வஞ்சத் தீஞ்சொற்சொல்வாரை நம்பலாகாதென்பது மொருங்குகூறுகிறது. 'யானும்' என்றது பிற பகைவர்செருக்கையடக்கவல்ல யானுமென்றபடி. இது கெடுப்பான் கூற்றாய் அவன் தன்னையுணர்த்தியவாறு. 'இவ்விடத்திருந்த' என்றது கெடுக்கப்படுவானை அவன்பகைவரும் பிறருமறியுமாறு கெடுப்பான்சுட்டிக்காட்டியவாறு. 'என்முன்னோனுமாக' என்றது கெடுக்கப்படுவான் கெடுப்பானுகியதன்னைத் தமனென்று நம்பும்படி அன்புடைமையும் பணிவுடைமையுந்தோன்ற உறவுமுறை கூறியவாறு. 'ஒரு வினைசெய்யத்தொடங்கியக்காற் பகைவரால் வீரஞ்செயக்

* நாலடியார் 26-ம் அதிகாரம் (அறிவின்மை) செய்யுள்—7.

† பட்டினத்தார்பிரபந்தம், திருவேகம்பமாலை செய் — 22.

கிடந்ததொன் றுமில்லை"என்றது இதுகாறும் எம்முண் மாறுபாடுடையோமாயிருந் தோமாதலாற் பிற பகைவர் செருக்குற்றிருந்தார்; இப்பொழுது ஒன்றுபட்டோமாதலால் நாங்கள்கூடிச்செய்யப்போகும் ஒருகருமத்திற் பிறர் பகைவராய்வந்து அவர் வெற்றியடையக்கிடந்ததொருசெயலுமில்லை; எல்லாவெற்றியையும் யாமேயடைவோம் என்றவாறு. 'பிறரும்' என்றது பகைவரல்லாத பொதுமலாய்நின்றவரும் என்றவாறு. 'தமமொடுகூடி' என்றது பகைவராய்க் கெடுப்பாராகின்றருந் தமக்கு அநுகூலராய் என்றவாறு. படைதொழில்-போர். 'மாறுகொள்ளும்வகை' என்றது கெடுக்கப்படுவாரைப் பிறரெல்லாம் வீரமானத்தால் விரோதிக்கும்படி என்றவாறு. பகையைமிகச்சொல்லுதலாவது பகைவர்பலராய்மிகுமாறு வீரம்பேசுதல். "இடைநாயிற்கென்பிடுமாறு" என்பது பழமொழிக்கூற்று. அடுத்துக் கெடுக்குமியல்புடையான்கூறும் இன்மொழியை அறிவுடையோர் கேட்டுழி அதனைச்சுட்டி இடைநாய்க்கிட்டவெலும்பிது எனவழங்கும் வழக்கே இப்பழமொழி எனக்கொள்க. 'கள்ள ரெலும்பிடுமாறுபோலும்' என்றது கள்ளர் என்பிட்டு வஞ்சிக்குமுபாயம்போலும் உபாயமென்றவாறு. அதாவது—ஆடுதிருடுங்கள்ளர், ஆட்டுக்கிடைகாத்திருக்கும் நாய தம்மை ஐயுற்றுக் குரையாதிருக்குமவண்ணம் பசுவூன்றசைபற்றிய என்புத்துண்டத்தைச் சிறிது சேய்மைக்கண்வைத்திருந்து, மோப்பங்கொண்டு அந்நாய் தம்மருகுவருவதுகண்டு, அவ்வென்புத்துண்டத்தை அதன்முன்பிட அதனை அந்நாய் உவந்துகௌவிக்கௌவிச் சுவைத்து மகிழ்ந்து கள்வரைத் தமராகக்கருதி ஆட்டுக்கிடைப்பாதுகாப்பிற் பராக்காயிருக்குமளவிற் கள்வர் தம்மினத்தாரையேவி ஆடுமுதலியவற்றைத் திருடிச்செல்லச்செய்வது போலக் கெடுப்பாரும், கெடுக்கப்படுவார்கேட்டுத் தம்மைத் தமரென்று நம்பியுவக்குங் களிப்பாற் பாதுகாப்பிற் பராக்காயிருக்குமாறு, "யானுமற் றிவ்விருந்த வெம் முனு மாயக்கால், வீரஞ் செயக்கிடந்ததில்லென்று" சொல்லல்போன்ற வஞ்சத் திறச்சொற்களைச்சொல்லித் தம்மினத்தாரைத்தூண்டி அப்பகைவரது பாதுகாப்பற்ற நாடுமுதலியவற்றைக் கைப்பற்றச்செய்தலாம்.

74\. கண்ணில் கயவர் கருத்துணர்ந்து கைம்மிக
நண்ணி யவர்க்கு நல்லவை செய்யவே
எண்ணி யிடர்வந் தெனினும் புலிமுகத்
துண்ணி பறித்து விடல்.

எ-து, கண்ணோட்டமில்லாத கீழ்மக்கள் கருத்தின்கணவிருப்பிய துணர்ந்து செயன்மிக்கு அவரோடு நண்புகொண்டு நன்மையாயின செய்வாராயின், ஆராய்ந்துசெய்தால் நமக் கிடர்வருமென்றே புலி முகத்தினுண்ணியை அருளினாற்பறித்ததனோடொக்கும் என்றவாறு.

(குறிப்பு) இது கண்ணோட்டமில்லாதார்க்கு நன்மைசெய்யலாகாதென்கிறது. 'கண்ணோட்டமில்லாதகீழ்மக்கள்' என்றது (ஏது அடையானடுக்கப்பட்டமையால்) கண்ணோட்டமின்மையொன்றனே சௌர்ய வீர்ய தைர்ய பராக்கிரம முதலிய நற்குணங்களையும் அநுகூலர்பக்கல் தீக்குணங்களாக்கிக்கொள்ளுந் தீயார் என்ற குறிப்புணர்த்தியவாறு. 'கருத்தின்கண்விரும்பியதுணர்ந்து' என்றது அவர்க்குச்செய்யும் நன்மையின் சிறப்புத்தோன்றக் கூறியவாறு. கருத்தின் கண்விரும்பியதுணர்ந்து நன்மையாயினசெய்வாராயின் என இயையும். கருத்தின்கண் விரும்பியதுணர்ந்துசெய்யுஞ் சிறந்தநன்மைக்கே தீங்குபுரியும் இயல்புடையராயின் அவர் கருத்துணராதுசெய்யும் நன்மைக்கு மிக்க தீங்குவிளைப்பரென்பது சொல்லவேண்டாதாயிற்று. ஆகவே அவர்க்கு ஒருவிதத்திலும் நன்மை செய்யலாகாதென்பது குறிப்பு. 'செயன்மிக்கு' என்றது தீயாரோடிணங்கலாகாதெனனும் விதியைக்கடந்து என்றவாறு. இங்கு ஒழுக்கத்தையுணர்த்தும் கையும் செயலும் விதிவாக்கியத்துக்கு ஆகுபெயராயின. 'அவரோடுநண்பு கொண்டு' என்றது தம்மொடுநண்பில்லாத அக்கயவரோடு தாமாய் ஒருதலை நண்புகொண்டென்றவாறு. 'செய்வாராயின' என்றது செய்தல் அரிதென்னுங் குறிப்புணர்த்தியவாறு. 'ஆராய்ந்து இதுசெய்தால் நமக்கு இடர்வருமென்னுதே' என்றது இதுசெய்தால் நமக்கு இடர்வருமென்று ஆராயாதே என்றபடி. 'புலிமுகத்துண்ணியை' என்றது புலி தன்னைப் போக்கிக்கொள்ளவொண்ணாதபடி அதன் கண்ணிமையைப்பற்றி ரத்தபானம்பண்ணும் உண்ணியை என்றவாறு. ஈண்டு முகம் ஆகுபெயராயிற்று. 'அருளினாலே' என்றது பிறிதொருபயனுங்கருதாது புலியின்றுயர்தீர்த்தலொன்றே கருதி யென்றவாறு. 'பறித்ததனோடொக்கும்' என்றது பறித்தற்றொழில் ஐதிகச் செயலோடொக்கும் அச்செயலென்றவாறு. அச்செயலென்ற சுட்டு வருவித்துக் கூட்டியுரைத்துக்கொள்க. 'எண்ணியிடர்வருமென்னார்' என்னும் உவமையடையைப் பொருளொடுங்கூட்டிவிரித்துரைத்துக்கொள்க. "புலிமுகத் துண்ணி பறித்துவிடல்" என்பது ஓர் ஐதிகமடியாகவந்த பழமொழிக்கூற்று. இதனை இக்கூற்றாலேவிளங்கும். இது "வேங்கை வரிப்புலிநோய் தீர்த்த விடகாரி, யாங்கதனுக் காகார மானாற்போல்"* எனப் பிறிதோராற்றானும் வழங்கப்படும். சௌரிய வீரிய தைரிய பராக்கிரமமுதலிய குணவிசேடங்களாற்சிறந்த ஒரு புலியின்முகத்து அதனுதிரத்தை யுண்ணுதவாறு உண்ணியைப்பறித்தெடுத்து நன்மைபுரிந்தவனைக் கண்ணோட்டமின்றிக் குடலைப்பறித்து உதிரத்தையுண்டு உயிரைப்போக்கிய அப்புலிபோலச் சௌர்யாதிகுணங்களுடையராயினும் நிர்த்தாக்ஷிண்யமுள்ள கயவர்கள் தமக்கு நன்மைசெய்வார்க்கும் மிக்கதீங்குசெய்வார் எனக் கருத்துநோக்கிப் பொருளொடுபொருத்தி யுரைத்துக்கொள்க.

---

* மூதுரை, செய்யுள்—15.

75. பெரியார்க்குச் செய்யுஞ் சிறப்பினைப் பேணிச்
சிறியார்க்குச் செய்து விடுதல்—பொறிவண்டு
பூமே லிசைமுர லூர வதுவன்றோ
நாய்மேற் றவிசிடு மாறு.

எ-து, பெருமைக்குணமுடையோர்க்குச் செய்யக்கடவ சிறப்பினை விரும்பிச சிறுமைக்குணமுடையார்க்குச செய்துவிடுதல, பொறிவண்டு பூமேற்படிந் திசைமுரலாநின்றவூரனே! அதுவன்றோ! குதிரைமேலிடக் கடவ பண்ணினை நாய்முதுகிலிடுநெறி யென்றவாறு.

(குறிப்பு) இது தகுதியில்லாதார்க்குச்செய்யுஞ் சிறப்பின்குற்றம கூறுகிறது. பெருமைக்குணங்களாவன :—கல்வி அறிவு ஒழுக்கம் குடிப்பிறப்பு வீரம் வினைத்திட்பம் சால்பு முதலியன. 'செய்யககடவசிறப்பினை' என்றது செய்யககடமைப்பட்டசிறப்புக்களை யென்றவாறு. அவை பொற்பூமுதலிய பரிசும் பட்டமும் புரவலர்தம்மோடிருக்கையு மெடுபடியு முதலாயின. 'விரும்பி' என்றது வெளியிடத்தகாதகாரணததால அவரைவிரும்பி என்றவாறு. சிறுமைக் குணமுடையார் - பெருமைககுணங்களின் மாறுபட்டகுற்றங்களையுடையராய்க காமநெறியொழுகுமவர். 'செய்துவிடுதல' என்றது செய்துவிட்டோமேயென்று பச்சாத்தாபமுண்டாகும்படி தவறுகசசெய்தல என்றவாறு. இதுவே பின்னும் அதுவென்று சுட்டப்பட்டமையால், தகாது என ஒருபயனிலைசசொல்வருவித்து முடிக்கற்பாற்று. இங்ஙனம முடியாதிருப்பின் மேல் அதுவென்னுஞ்சுட்டு வேண்டாதுகூறலாம். "நாய்மேற்றவிசிடுமாறு" என்பது பழமொழிக்கூற்று. தகாதார்க்குச்செய்யுஞ்சிறப்பை நாய்க்கிட்டதவிசு என வழங்கும் அடிப்பட்ட வழக்கே இதன்பழமொழியாகும். நாய்மேற்றவிசிடுமாறென்றமையால், 'குதிரை மேலிடக்கடவபண்ணினை' என மறுதலையுவமம் வருவித்துரைக்கப்பட்டது. பண் - ஏறுகுதிரைமேலிடுஞ் சேணமென்னுந்தவிசு. 'குதிரைமேலிடக்கடவ பண்ணினை நாய்முதுகிலிடுநெறி' என்றது தகாதகாரியம், பயனிலலாதசெயல், இகழப்படுஞ்செயல், அறிவில்லாதசெயல், முறையில்லாதசெயல் எனப் பலதிறத் தானும் பழித்தற்குரிய குறிப்புணர்த்தியவாறு. இப்பழமொழிக்கு மறுதலையுவமம் யானைமேலிட்டதவிசென்பதே சிறந்ததெனக்கொண்டு, "அடிகளிற்றெருத்தி னிட்ட, வண்ணப்பூந்தவிசுதன்னைஞமலிமேலிட்டதொக்கும்" எனச் சீவகசிந்தாமணி*யுள் வழங்கப்பட்டது. இப்பழமொழியிலுள்ள ஏழனுருபைப் பொருட்டுப் பொருளுணர்த்தற்குரிய விடயசத்தமியாகவும், மறுதலையுவமம் நாயகராகவும் கொண்டு, நாயகருக்கிட்டதவிசை நாய்க்கிட்டுத்தூர்த்தவைத்தவாறும் எனப் பிறிதோருரையில் வரையப்பட்டுள்ளது இக்கருத்துப்பற்றியே திருவாசகத்தில்

* சீவகசிந்தாமணி, நாமகளிலம்பகம், செய்யுள்—202.

இது ,இங்கு எடுத்துக்கொண்டபொருளை நாட்டுதற்குக்காட்டிய ஏது வசனமாய்நின்றது.'ஒருபொருளைக் கையாற்றொட்டாரை யொட்டாத பொருளில்லை'யென்றது அபகரித்துக்கொள்வாரை யடையாதபொரு ளொன்றுமில்லை யென்றபடி. இங்குக் கையாற்றொடுதல் அபகரித்தற் பொருளில்வழங்கும் கைவைத்தல்என்னுங் குறிப்புமொழியின் பரியாய மாயிற்று. 'அட்டாரைப்பொருந்திப் பயன்படாத கலமுமில்லை' யென் றது பிறிதுமொழிதலாய், வினையாளர்க்குதவாத வினைக்களமுமில்லை யென்னுங் குறிப்புணர நின்றது. இது எடுத்துக்கொண்டபொரு ணிதற்கேதுவாய்நின்றமையால் ஆதலான் என ஏதுவசனம் வருவித் துரைக்கப்பட்டது. ஆதலாற் பரிவில்லாதாரை வையாதொழிகவெனக் கூட்டிமுடித்துக்கொள்க.

119. ஒற்கந்தா முற்ற விடத்து முயர்ந்தவர்
நிற்பவே நின்ற நிலையின்மேல—வற்பத்தாற்
றன்மே னலியும் பசிபெரி தாயினும்
புன்மேயா தாகும் புலி.

எ-து. வறுமைதாமுற்றவிடத்துமுயர்ந்தவர்நின்றநிலையின்கண்வழுவாதே நிற்பர். மிகவுந்தன்மாட்டுநலியும் பசிபெரிதாயினும் புலிபுல்லினைமேயாதாகுமது போலவென்றவாறு.

(குறிப்பு) இது, தருமகர்த்தராகநியமிக்கத்தக்காரிவரென்கிறது. 'வறுமைதாமுற்றவிடத்து முயர்ந்தவர் நின்றநிலையின்கண் வழுவாதே நிற்பர்' என்றது குடிப்பிறப்பாலு மொழுக்கத்தாலு முயர்ந்தவர் தாமுணவின்றிவருந்தியகாலத்தும் அவர்,தமக்குரியபயன்கிடைத்தபோ ததனைநுகர்வதன்றித் தம்மொழுக்கங்கெடுமாறு தமக்குரியதல்லாத தொருபொருளையும் தாம் நுகரவிரும்பார் என்றவாறு. நிலை-ஒழுக்கம். இதனால் அவர் செல்வமுமுடையராயிற் றமக்குரியதல்லாததொரு பொருளையும் நுகராரென்பது சொல்லவேண்டாதாயிற்று. இது ஏது. ஆதலாலவரே தருமகர்த்தராகநியமிக்கத்தக்கார் என்பது குறிப்பு. இது பொருள். வற்பமென்னுங்குறிப்புமொழி உணவுகிடையாமைப்பொரு ளுணரநின்றது. பின்னடியிரண்டும் பழமொழிக்கூற்று. இதன்பழ மொழி "புலிபசித்தாற்புல்லைத்தின்னுமா" எனவழங்கப்படும். இதன் பொருள் குலபரம்பரையாய்வந்தநியமத்தாற்சிறந்த புலியேறு மிக்க

பசியால் வருந்தியவிடத்தும் அது தனக்குரியதல்லாத புல்லைத்தின்ன விரும்பாதவாறுபோல, குடிப்பிறப்பாயமைந்தநியமத்தாற் சிறந்தார் மிக்கவறுமையுற்றகாலத்தும் அவர்தமக்குரியதல்லாத பொருளை நுகர்ந் துயிர்வாழவிரும்பார் என்பதாம். இது இங்கு எடுத்துக்கொண்ட பொருளை நாட்டுதற்குக் காட்டிய ஏதுவைநாட்டும் பிரமாணவாக்கிய மாயிற்று. இங்ஙனமன்றி இப்பாட்டு உயர்ந்தவாதியல்புகூறியதெனக் கொண்டு செம்பொருளொன்றேயுணர்த்தித் திட்டாந்தமாய்நின்ற தெனினுமாம். இப்பழமொழி "இடுக்கண்டலைவந்தக்கண்ணுமரிமாக், கொடிப்புற்கறிக்குமோமற்று" என நாலடியுள்ளும்* "செங்கட்புலியே றறப்பசித்துநதின்னுவாம, பைங்கட்புனத்ததைபங்கூழ்"* என நீதிநெறி விளக்கத்துள்ளும. "புலி புற்றின்றதெனத்" திருக்குறளுரையுள்ளும் எடுத்தாளப்பட்டது.

120. பன்னாளு நின்ற விடத்துங் கணிவேங்கை
நன்னாளே நாடி மலர்தலான்—மன்ன
ருவப்ப வழிபட் டொழுகினுஞ் செல்வந்
தொகற்பால போழ்தே தொகும்.

எ-து, பலநாளுந்தானுளதாய்நின்றவிடத்துங் கணிகளைப்போலநாளையறி விக்கும்வேங்கை தாமலரக்கடவநாளையறிந்துபூத்தலா லரசர்மனமகிழும்படி வழி பட்டொழுகினராயினுமொருவர்க்குப்பொருள்கூடுங்காலத்தேவந்து கூடுமெல்லது கூடாதென்றவாறு.

(குறிப்பு) இது, ஒருவர்செல்வமடைதற்குக் காலமும ஒத்துவர வேண்டுமெனக் காலமறிதல்கூறுகிறது. 'பலநாளுந்தானுளதாய்நின்ற விடத்தும்' என்றது பூத்தற்குமுதற்காரணமாகியதானும், காலவிசேட மொழிந்தபிறகாரணங்களும் மற்றைக்காலங்களிலெல்லாமுள்ளனவா யிருப்பினும் (கணிவேங்கைமலர்வதன்று) என்றவாறு. இது ஒரு காரியத்தோற்றத்திற்கு அதற்குரியகாலவிசேடமும் காரணமாமென வெதிரேகதிட்டாந்தங்காட்டியபடி. கணிவேங்கை-கணியாகியவேங்கை. இது வேங்கையென்னும் பலபொருளொருசொல்லின்குறிப்பொழித்து வேங்கைமரமென வெளிப்படையாக்கவந்த இருபெயரொட்டு. 'கணி களைப்போலநாளையறிவிக்கும்' என்றது சோதிடகணிதம்வல்லாரைப்

* நாலடியார் 15-ஆம் அதிகாரம் குடிப்பிறப்பு செய். 1. நீதிநெறிவிளக்கம் செய். 61. திருக்குறள் உஅ-ம் அதிகாரம் கூடாவொழுக்கம் செய். 3-ன்உரை.

போலப்பருவகாலவிசேஷத்தைத்தவறுதறிவிப்பதுஎனக்கணிஎன்னும் பெயரின்காரணவாற்றல்காட்டியதுணையாய்நின்றது. 'வேங்கை தாமலரக்கடவநாளையறிந்துபூத்தலால்' என்றது வேங்கைமரம் தான் பூத்தற்கனுகூலமாகியபருவகாலவிசேடம்வாய்த்தவிடத்துத் தப்பாது தன்காரியமாகியபூத்தலையடையுமாதலால் என்றவாறு. இது, காரிய சித்திக்குக் காலவிசேடமும் காரணமாமென்பதை அந்நுவயதிருஷ்டாந் தத்தாற்காட்டியபடி. ஈண்டுஆலுருபுஞாபகவேதுப்பொருண்மையுணர நின்றது. 'அரசர்மனமகிழும்படிவழிபட்டொழுகினராயினும்' என்றது ஒருவர்பொருள்கூட்டுதற்குப் பிறகாரணங்களாகிய தாம்செய்தொழு கும அரசன்வழிபாடும், அவ்வழிபாடுகொள்ளுமரசனும், அவனுக்கதில் விருப்பமும், அவ்விருப்பானுவந்தளிததற்கு அவன்மாட்டுப்பொருளும் மற்றைக்காலங்களிலிருப்பினும் என்றபடி. 'ஒருவர்க்குப் பொருள் கூடுங்காலத்தேவந்துகூடுமல்லதுகூடா'தென்றது தாம்பொருளுடைய ராதற்குரியகாலவிசேடத்தாற்கிட்டுவதல்லது மற்றைக்காலத்திற் கிட்டாதென்றவாறு. பொருள்கூட்டுதற்கேற்ற காலவிசேடம்வாய்த்த விடத்துத் தவறவிடலாகாதென்பதுகுறிப்பு. இங்குக் காலவிசேட மென்றது தம் காரியசித்திக்கனுகூலமாகியசந்தர்ப்பததை யொட்டி யிருக்கும் காலமெனவுணர்க. இதன்பழமொழி செய்கிறவேலையைச் செய்துவந்தாற்கிடைக்கிறபோதுகிடைக்கும் எனச் செம்பொருளில்வழங் கும் அடிப்பட்டவழக்காயுள்ளது.

121. காடுறை வாழ்க்கைக் கடுவினை மாக்களை
நாடுறைய நல்கினு நன்கொழுகார்—நாடொறுங்
கையுள தாகி விடினுங் குறுமபூழ்க்குச்
செய்யுள தாகு மனம்.

எ-து, காடுறையும்வாழ்க்கையையுடைய கொலைத்தொழிலையுடையமக்களை நாட்டின்கணுறையவொருவர்நல்கினுங் கொலைத்தொழின்முதலானவற்றைத் தவிர்ந்துநன்குகவொழுகமாட்டார். நாடோறுங்கையுளே மருவிவளரினுங் குறும் பூழ்க்குச் செய்யின்கண்ணேயுறையவேண்டுமனமே யுள்ளததுபோல எ-று.

(குறிப்பு) இது, புல்லோரை நலலொழுக்கமுடையராகத்திருத்த லரிதென்கிறது. 'காடுறையும்வாழ்க்கையையுடையகொலைத்தொழி லையுடையமக்களை' என்றது நாடாகாதகாட்டிடத்தை யிருப்பிடமாகக் கொண்டு விலங்கினங்களைக்கொன்றுதின்றுயிர்வாழும் விலங்குபோலும்

௭௪. அன்பீனு மார்வ முடைமை யதுவீனும்
நண்பென்னு நாடாச் சிறப்பு.

இ - ள். அன்பு ஆர்வமுடைமை ஈனும் - ஒருவனுக்குத் தொடர்புடையார்மாட்டுச் செய்தவன்பு அத்தன்மையாற் பிறர்மாட்டும் விருப்பமுடைமையைத்தரும்,—அது நண்பு என்னும் நாடாச் சிறப்பு ஈனும் - அவ்விருப்பமுடைமைதான் இவற்குப் பகையும் நொதுமலுமில்லையாய் யாவரும் நண்பென்றுசொல்லப்படும் அளவிறந்த சிறப்பினைத்தரும். எ - று.

உடைமை உடையனாந்தன்மை. யாவருநண்பாதல் எல்லாப்பொருளுமெய்துதற்கேதுவாகலின், அதனை நாடாச்சிறப்பென்றார்.

௭௫. அன்புற் றமர்ந்த வழக்கென்ப வையகத்
தின்புற்றா ரெய்துஞ் சிறப்பு. ௫.

இ - ள். அன்பு உற்று அமர்ந்த வழக்கு என்ப - அன்புடையராய இல்லறத்தோடு பொருந்திய நெறியின் பயனென்று சொல்லுவர் அறிந்தோர்—வையகத்து இன்பு உற்றார் எய்தும் சிறப்பு - இவ்வுலகத்து இல்வாழ்க்கைக்கணின்று இன்பநுகர்ந்து அதன்மேல் துறக்கத்துச்சென்றெய்தும் பேரின்பத்தினை. எ - று.

வழக்கு ஆகுபெயர். இல்வாழ்க்கைக்கணின்று மனைவியோடும் மக்களோடும் ஒக்கலோடுங்கூடியின்புற்றார் தாஞ்செய்த வேள்வித்தொழிலாற்றேவராய ஆண்டுமின்புறுவராகலின், இன்புற்றாரெய்துஞ்சிறப்பென்றார். தவத்தாற்றுன்புற்றெய்துந் துறக்கவின்பத்தினை ஈண்டுமின்புற்றெய்துதல் அன்பானன்றி யில்லையென்பதாம்.

௭௬. அறத்திற்கே யன்புசார் பென்ப வறியார்
மறத்திற்கு மஃதே துணை. ௬.

இ - ள். அன்பு சார்பு அறத்திற்கே என்ப அறியார் - அன்பு துணையாவது அறத்திற்கேயென்று சொல்லுவர் சிலரறியார்;—மறத்திற்கும் அஃதே துணை - வினைமறத்திற்கும் அவ்வன்பே துணையாவது. எ — று.

ஒருவன்செய்த பகைமைபற்றி உள்ளத்து மறநிகழ்ந்துழி அவனை நட்பாகக்கருதி அவன்மேலன்புசெய்ய அது நீங்குமாகலின், மறத்தை நீக்குதற்குந்துணையாமென்பார், மறத்திற்குமஃதே துணையென்றார், "துன்பத்திற் கியாரே துணையாவார்." * என்பு

* திருக்குறள், ௧௨௯௯.

யிப்போல. * இவையைந்துபாட்டானும் அன்பினது சிறப்புக்கூறப்பட்டது. (சு)

எஎ. என்பி லதனை வெயில்போலக் காயுமே
யன்பி லதனை யறம். எ.

இ - ள். என்பு இலதனை வெயில்போலக் காயும் - என்பில்லாத வுடம்பை வெயில்காய்ந்தாற்போலக் காயும்—அன்பு இலதனை அறம் - அன்பில்லாதவுயிரை அறக்கடவுள். எ - று.

என்பிலதென்றதனான் உடம்பென்பதூஉம், அன்பிலதென்றதனான் உயிரென்பதூஉம் பெற்றாம். வெறுப்பின்றி எங்குமொருதன்மைத்தாகிய வெயிலின்முன் என்பில்லது தன்னியல்பாற் சென்று கெடுமாறுபோல, அத்தன்மைத்தாகிய வறத்தின்முன் அன்பில்லது தன்னியல்பாற்கெடுமென்பதாம். அதனைக்காயுமென வெயிலறங்களின்மேலேற்றினார், அவற்றிற்கும் அவ்வியல்புண்மையின். இவ்வாறு "அல்லவை செய்தாற் கறங்கூற்றம்" † னெப் பிறருங்கூறினார். (எ)

எஅ. அன்பகத் தில்லா வுயிர்வாழ்க்கை வன்பாற்கண்
வற்றன் மரந்தளிர்த் தற்று. அ.

இ - ள். அகத்து அன்பு இல்லா உயிர் வாழ்க்கை-மனத்தின்கணன்பில்லாத உயிர் இல்லறத்தோடு கூடி வாழ்தல்—வன்பாற்கண் வற்றல் மரம் தளிர்த்தற்று - வன்பாலின்கண் வற்றலாகிய மரந் தளிர்த்தாற்போலும். எ - று.

கூடாதென்பதாம். வன்பால் வன்னிலம். வற்றலென்பது பால்விளங்காவஃறிணைபடர்க்கைப்பெயர். (அ)

எகூ. புறத்துறுப் பெல்லா மெவன்செய்யும் யாக்கை
அகத்துறுப் பன்பி லவர்க்கு. கூ.

* "ஆதி சத்தத்தால் பூவிறகுச் சென்றான், துன்பத்திற் கியாரே துணையாவார், மறத்திற்கு மஃதே துணை, பிணிக்குமருந்து எனய வற்றின்கட் பறித்தல் நீக்குதலென நடுவே பெய்து பொருளுரைத்தத் துமுர்த்தமென்பதுங்கொள்க." என்றார் பிரயோகவிவேகநூலார். காரகபடலத்து "உடனிகழ்கின்ற" என்னும் பதினான்செய்யுளுரையிற்காண்க.

† நான்மணிக்கடிகை,—கல்லா வொருவற்குத் தன்வாயிற் சொற்—ற்ற—மெல்லிய வாழைக்குத் தானீன்ற காய்கூற்ற—மல்லவை செய்தாற் கறங்கூற்றங் கூற்றமே—யில்லிருந்து தீங்கொழுகுவாள்.

இ — ள். யாக்கையகத்து உறுப்பு அன்பு இலவர்க்கு — யாக்கை யகத்தின்கணின்று இல்லறத்திற்குறுப்பாகிய அன்புடையரல்லா தார்க்கு—புறத்து உறுப்பெல்லாம் எவன் செய்யும் — ஏனைப்புறத் தின்கணின்று உறுப்பாவனவெல்லாம் அவ்வறஞ்செய்தற்கண் என்னவுதவியைச் செய்யும்! எ — று.

புறத்துறுப்பாவன இடனும், பொருளும், ஏவல்செய்வாருமு தலாயின. துணையொடு கூடாதவழி அவற்றாற்பயனின்மையின், எவன்செய்யுமென்றார். உறுப்புப்போறலின், உறுப்பெனப்பட் டன. யாக்கையிற் கண்முதலிய உறுப்புக்களெல்லாம் என்ன பயனைச் செய்யும் மனத்தின்கணுறுப்பாகிய அன்பிலாதார்க்கென் றுரைப்பாருமுளர். அதற்கு இல்லறத்தோடு யாதுமியைபில்லா மையறிக. (௯)

௮0. அன்பின் வழிய துயிர்நிலை யஃதிலார்க்
கென்புதோல் போர்த்த வுடம்பு. ௧0.

இ — ள். அன்பின் வழியது உயிர்நிலை — அன்புமுதலாக அதன் வழிநின்ற உடம்பே உயிர்நின்றவுடம்பாவது;—அஃது இலார்க்கு உடம்பு என்பு தோல்போர்த்த — அவ்வன்பில்லாதார்க்கு உளவான உடம்புகள் என்பினைத் தோலாற்போர்த்தனவாம், உயிர்நின்றன வாகா. எ — று.

இல்லறம் பயவாமையின், அன்னவாயின. இவைநான்குபாட் டானும் அன்பில்வழிப்படுங் குற்றங்கூறப்பட்டது. (௧0)

## ௯ ம் அதி.—விருந்தோம்பல்.

அஃதாவது இருவகை விருந்தினரையும் * புறந்தருதல். தென்புலத்தார் முதலியவைம்புலத்துள் முன்னையவிரண்டும் கட்பு லனாகாதாரை நினைந்து செய்வனவாகலானும், பின்னையவிரண்டும் பிறர்க்கீதலன்மையானும், இடைநின்ற விருந்தோம்பல் சிறப்பு டைத்தாய் இல்லறங்கட்கு முதலாயிற்று. வேறுகாத அன்புடையி ருவர்கூடியல்லது செய்யப்படாமையின், இஃது அன்புடைமை யின்பின் வைக்கப்பட்டது.

௮௧. இருந்தோம்பி யில்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு. ௧.

* இருவகைவிருந்தினர். ௪௩—ம் குறளுரையிற்காண்க.

இ - ள். இல் இருந்து ஓம்பி வாழ்வது எல்லாம் - மனைவி யோடும் வனத்திற்செல்லாது இல்லின்கணிருந்து பொருள்களைப் போற்றிவாழுஞ் செய்கையெல்லாம்—விருந்து ஓம்பி வேளாண்மை செய்தற்பொருட்டு - விருந்தினரைப்பேணி அவர்க்குபகாரஞ்செய தற்பொருட்டு. எ - று.

எனவே, வேளாண்மைசெய்யாவழி இல்லின்கணிருத்தலும் பொருள்செய்தலும் காரணமாக வருந்துன்பச்செய்கைகளெல் லாம் பயனில்லையென்பதாம். (௧)

௮௨. விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று. ௨.

இ - ள். சாவா மருந்து எனினும் - உண்ணப்படும் பொருள் அமிர்தமேயெனினும்,—விருந்து புறத்ததாத் தான் உண்டல் - தன்னைநோக்கி வந்த விருந்து தன்னில்லின்புறத்ததாகத் தானே உண்டல்—வேண்டற்பாற்று அன்று - விரும்புதன் முறைமையு டைத்தன்று. எ - று.

சாவாமருந்து சாவாமைக்குக் காரணமாகிய மருந்து. விருந் தின்றியே ஒருகாற்றானுண்டலைச் சாவாமருந்தென்பார் உளராயி னும் அதனையொழிகவென்றுரைப்பினுமமையும். இவையிரண்டு பாட்டானும் விருந்தோம்பலின் சிறப்புக்கூறப்பட்டது. (௨)

௮௩. வருவிருந்து வைகலு மோம்புவான் வாழ்க்கை
பருவந்து பாழ்படுத லின்று. ௩.

இ - ள். வரு விருந்து வைகலும் ஓம்புவான் வாழ்க்கை - தன் னைநோக்கி வந்தவிருந்தை நாடோறும் புறந்தருவானதில்வாழ் க்கை—பருவந்து பாழ்படுதல் இன்று - நல்குரவான் வருந்திக் கெடுதலில்லை. எ - று.

நாடோறும் விருந்தோம்புவானுக்கு அதனாற்பொருடொலை யாது மேன்மேற்கிளைக்குமென்பதாம். (௩)

௮௪. அகனமர்ந்து செய்யா ளுறையு முகனமர்ந்து
நல்விருந் தோம்புவா னில். ௪.

இ - ள். செய்யாள் அகன் அமர்ந்து உறையும் - திருமகள் மனமகிழ்ந்து வாழாநிற்கும்—முகன் அமர்ந்து நல்விருந்து ஓம்பு வான் இல் - முகமினியனாய்த் தக்கவிருந்தினரைப் பேணுவான தில்லின்கண். எ - று.

மனமகிழ்தற்குக் காரணம் நன்செல்வம் நல்வழிப்படுதல். தகுதி ஞானவொழுக்கங்களானுயர்தல். பொருள் கிளைத்தற்குக் காரணங் கூறியவாறு. (௪)

௮௫. வித்து மிடல்வேண்டுங் கொல்லோ விருந்தோம்பி
மிச்சின் மிசைவான் புலம். ௫.

இ—ள். விருந்து ஓம்பி மிச்சில் மிசைவான் புலம் - முன்னே விருந்தினரை மிசைவித்துப் பின் மிக்கதனைத் தான் மிசைவானது விளைபுலத்திற்கு—வித்தும இடல் வேண்டுமோ - வித்திடுதலும் வேண்டுமோ, வேண்டா. எ—று.

கொல்லென்பது அசைநிலை. தானே விளையுமென்பது குறிப்பெச்சம். இவைமூன்றுபாட்டானும் விருந்தோம்புவார் இம்மைக்கணெய்தும் பயன் கூறப்பட்டது. (௫)

௮௬. செல்விருந் தோம்பி வருவிருந்து பார்த்திருப்பா
னல்விருந்து வானத் தவர்க்கு. ௬.

இ—ள். செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்து இருப்பான் - தன்கட்சென்றவிருந்தைப் பேணிப் பின் செல்லக்கடவ விருந்தைப் பார்த்துத் தான் அதனொடும் உண்ணவிருப்பான்—வானத்தவர்க்கு நல்விருந்து - மறுபிறப்பிற்றேவனாய் வானிலுள்ளார்க்கு நல்விருந்தாம். எ—று.

வருவிருந்தென்பது இடவழுவமைதி. நல்விருந்து எய்தாவிருந்து. இதனான் மறுமைக்கணெய்தும்பயன் கூறப்பட்டது. (௬)

௮௭. இனைத்துணைத் தென்பதொன் றில்லை விருந்தின்
றுணைத்துணை வேள்விப் பயன். ௭.

இ—ள். வேள்விப் பயன் இனைத்துணைத்து என்பது ஒன்று இல்லை - விருந்தோம்பலாகிய வேள்வியின்பயன் இன்னளவிற்றென்பதோரளவுடைத்தன்று;—விருந்தின் துணைத் துணை - அதற்கு அவ்விருந்தின் தகுதியளவே அளவு. எ—று.

ஐம்பெருவேள்வியில் * ஒன்றாகலின் வேள்வியென்றும், பொருளளவு "தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்—

* ஐம்பெருவேள்வியாவன பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம், பிதிர்யாகம், பூதயாகமென்பன. அவற்றுள், பிரமயாகம் வேதமோதல்; தேவயாகம் ஓமஞ்செய்தல்; மானுடயாகம் விருந்தோம்பல்; பிதிர்யாகம் நீர்க்கடனாற்றல்; பூதயாகம் பலியீதல்.

வான்சிறிதாப் போர்த்து விடும்" * ஆகலின், இனைத்துணைத்தென்பதொன்றில்லையென்றுங் கூறினார். இதனுன் இருமையும் பயத்தற்குக் காரணங் கூறப்பட்டது. (௭)

௮௮. பரிந்தோம்பிப் பற்றற்றே மென்பர் விருந்தோம்பி
வேள்வி தலைப்படா தார். ௮.

இ — ள். பரிந்து ஓம்பிப் பற்று அற்றேம் என்பர் - நிலையாப் பொருளை வருந்திக்காத்துப் பின் அதனையிழந்து இதுபொழுது யாம் பற்றுக்கோடிலமாயினே மென்றிரங்குவர்—விருந்து ஓம்பி வேள்வி தலைப்படாதார் - அப்பொருளான் விருந்தினரையோம்பி வேள்விப் பயனையெய்தும் பொறியிலாதார். எ — று.

"ஈட்டிய வொண்பொருளைக்—காத்தலு மாங்கே கடுந்துன்பம்" † ஆகலின், பரிந்தோம்பியென்றார். வேள்வி ஆகுபெயர். (௮)

௮௯. உடைமையு ளின்மை விருந்தோம்ப லோம்பா
மடமை மடவார்க ளுண்டு. ௯.

இ — ள். உடைமையுள் இன்மை விருந்தோம்பல் ஓம்பா மடமை - உடைமைக்காலத்தின்மையாவது விருந்தோம்பலையிகழும் பேதைமை:—மடவார்கண் உண்டு - அஃது அறிந்தார்மாட்டு உளதாகாது, பேதையார்மாட்டேயுளதாம். எ — று.

உடைமை பொருளுடையனுந்தன்மை. பொருளாற்கொள்ளும்பயனை யிழப்பித்து உடைமையை இன்மையாக்கலின், மடமையை இன்மையாகவுபசரித்தார். பேதைமையான் விருந்தோம்பலையிகழிற் பொருள் நின்றவழியும் அதனாற்பயனில்லையென்பதாம். இவையிரண்டுபாட்டானும் விருந்தோம்பாவழிப் படுங்குற்றங் கூறப்பட்டது. (௯)

௯௦. மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து. ௧௦.

---

* நாலடியார், அறன்வலியுறுத்தல்,—உறக்குந் துணையதோராலம்வித் தீண்டி—யிறப்ப நிழற்பயந் தாஅங் - கறப்பயனுந்—தான்சிறி தாயினுந் தக்கார்கைப் பட்டக்கால்—வான்சிறிதாப் போர்த்து விடும்.

† நாலடியார், ஈயாமை,—ஈட்டலுந் துன்பமற் றீட்டிய வொண்பொருளைக்—காத்தலு மாங்கே கடுந்துன்பங்—காத்தல்-குறைபடிற் றுன்பங் கெடிற்றுன்பந் துன்பக்-குறைபதி மற்றைப் பொருள்.

இ—ள். அனிச்சம் மோப்பக் குழையும் - அனிச்சப்பூ மோந்தவழியன்றிக்குழையாது;—விருந்து முகம் திரிந்து நோக்கக் குழையும் - விருந்தினர் முகம் வேறுபட்டு நோக்கக் குழைவர். எ—று.

அனிச்சம் ஆகுபெயர். சேய்மைக்கட்கண்டுழி இன்முகமும், அதுபற்றி நண்ணியவழி இன்சொல்லும், அதுபற்றி உடன்பட்டவழி நன்றாற்றலுமென விருந்தோம்புவார்க்கு இன்றியமையாத மூன்றனுள் முதலாய இன்முகம் இல்வழிச் சேய்மைக்கண்ணே வாடிநீங்குதலின், தீண்டியவழியல்லது வாடாத அனிச்சப்பூவினும் விருந்தினர் மெல்லியரென்பதாம். இதனான் விருந்தோம்புவார்க்கு முதற்கண் இன்முகம் வேண்டுமென்பது கூறப்பட்டது. ()

## ௧0 ம் அதி.—இனியவைகூறல்.

அஃதாவது மனத்தின்கணுவகையை வெளிப்படுப்பனவாகிய இனியசொற்களைச் சொல்லுதல். இதுவும், விருந்தோம்புவார்க்கு இன்றியமையாததாகலின், விருந்தோம்பலின்பின் வைக்கப்பட்டது.

௯௧. இன்சொலா லீர மளைஇப் படிறிலவாஞ்
செம்பொருள் கண்டார்வாய்ச் சொல். ௧.

இ—ள். இன்சொல்-இன்சொலாவன—ஈரம் அளைஇப் படிறு இலவாம் செம்பொருள் கண்டார் வாய்ச் சொல் - அன்போடு கலந்து வஞ்சனையிலவாயிருக்கின்ற அறத்தினை உணர்ந்தார்வாயிற் சொற்கள். எ—று.

ஆல் அசைநிலை. அன்போடு கலத்தல் அன்புடைமையை வெளிப்படுத்தல். படிறின்மை வாய்மை. மெய்யுணர்ந்தார் நெஞ்சிற் கெல்லாஞ் செம்மையுடைத்தாய்த்தோன்றலின், செம்பொருளெனப்பட்டது. இலவாஞ்சொல்லெனவியையும். வாயென வேண்டாதுகூறினார், தீயசொற்பயிலாவென்ப தறிவித்தற்கு. இதனான் இன்சொற்கிலக்கணங் கூறப்பட்டது. (௧)

௯௨. அகனமர்ந் தீதலி னன்றே முகனமர்ந்
தின்சொல னாகப் பெறின். ௨.

இ—ள். அகன் அமர்ந்து ஈதலின் நன்று - நெஞ்சுவந்து ஒருவற்கு வேண்டியதொருபொருளைக்கொடுத்தலினும் நன்று;—முகன் அமர்ந்து இன்சொலனாகப் பெறின் - கண்டபொழுதே முகமினியனாய் அதனோடு இனியசொல்லையுமுடையனாகப் பெறின். எ—று.

இன்முகத்தோடேகூடிய இன்சொல் ஈதல்போலப் பொருள்வயத்ததன்றித் தன்வயத்ததாயினும், அறநெஞ்சுடையார்க்கல்லது இயல்பாகவின்மையின், அதனினுமரிதென்னுங் கருத்தான், இன்சொலனாகப் பெறினென்றார். (௨)

௯௩. முகத்தா னமர்ந்தினிது நோக்கி யகத்தானா
மின்சொ லினதே யறம். ௩.

இ-ள். முகத்தான் அமர்ந்து இனிது நோக்கி - கண்டபொழுதே முகத்தான் விரும்பி இனிதாக நோக்கி—அகத்தான் ஆம் இன்சொலினதே அறம் - பின் நண்ணியவழி மனத்தொடுகூடிய இனியசொற்களைச் சொல்லுதலின்கண்ணதே அறம். எ-று.

நோக்கியென்னும் வினையெச்சம் இன்சொலென அடையடுத்துநின்ற முதனிலைத்தொழிற்பெயர்கொண்டது. ஈதலின்கண்ணதன்றென்றவாறு. இவையிரண்டுபாட்டானும் இன்முகத்தோடுகூடியவின்சொல் முன்னரே பிணித்துக்கோடலின் விருந்தோம்புதற்கட் சிறந்ததென்பது கூறப்பட்டது. (௩)

௯௪. துன்புறூஉந் துவ்வாமை யில்லாகும் யார்மாட்டு
மின்புறூஉ மின்சொ லவர்க்கு. ௪.

இ-ள். யார்மாட்டும் இன்புறூஉம் இன்சொலவர்க்கு - எல்லார்மாட்டும் இன்பத்தை மிகுவிக்கும் இன்சொல்லையுடையார்க்கு—துன்புறூஉம் துவ்வாமை இல்லாகும் - துன்பத்தை மிகுவிக்கும் நல்குரவு இல்லையாம். எ-று.

நாமுதலிய பொறிகள் சுவைமுதலிய புலன்களை நுகராமையுடைமையின், துவ்வாமையென்றார். யார்மாட்டுமின்புறூஉமின்சொலவர்க்குப் பகையும் நொதுமலுமின்றி உள்ளது நண்பேயாம் ஆகவே, அவர் எல்லாச்செல்வமுமெய்துவரென்பது கருத்து. (௪)

௯௫. பணிவுடைய னின்சொல னாத லொருவற்
கணியல்ல மற்றுப் பிற. ௫.

இ-ள். ஒருவற்கு அணி பணிவு உடையன் இன்சொலனாதல் - ஒருவனுக்கணியாவது தன்னாற்றாழப்படுவார்கட்டாழ்ச்சியுடையனும் எல்லார்கண்ணும் இனியசொல்லையுமுடையனுதல்;—பிற அல்ல - இவையிரண்டுமன்றி மெய்க்கணியும் பிறவணிகள் அணியாகா. எ-று.

இன்சொலனாதற்கினமாகலின், பணிவுடைமையும் உடன்கூறினார். ஒற்று அசைநிலை. வேற்றுமையுடைமையாற் பிறவெனவும், இவை போலப் பேரழகுசெய்யாமையின் அல்லவெனவுங் கூறினார். இவையிரண்டுபாட்டானும் இனியவை கூறுவார்க்கு இம்மைப்பயன் கூறப்பட்டது. (௫)

கூசு. அல்லவை தேய வறம்பெருகு நல்லவை
நாடி யினிய சொலின். சு.

இ - ள். நல்லவை நாடி இனிய சொலின் - பொருளாற் பிறர்க்கு நன்மை பயக்குஞ்சொற்களை மனத்தானாராய்ந்து இனியவாக ஒருவன்சொல்லுமாயின்,—அல்லவை தேய அறம் பெருகும் - அவனுக்குப் பாவங்கடேய அறம் வளரும். எ - று.

தேய்தல் தன்பகையாகிய அறம் வளர்தலிற் றனக்கு நிலையின்றிமெலிதல். "தவத்தின்முன் னில்லாதாம் பாவம்." * என்பதூஉம் இப்பொருட்டு. நல்லவை நாடிச் சொல்லுங்காலுங் கடியவாகச்சொல்லின், அறனாகாதென்பதாம். இதனான் மறுமைப்பயன் கூறப்பட்டது. (சு)

கூஎ. நயனீன்று நன்றி பயக்கும் பயனீன்று
பண்பிற் றலைப்பிரியாச் சொல். எ.

இ - ள். நயன் ஈன்று நன்றி பயக்கும் - ஒருவனுக்கு இம்மைக்கு நீதியையுமுண்டாக்கி மறுமைக்கு அறத்தையும் பயக்கும்—பயன் ஈன்று பண்பின் தலைப்பிரியாச் சொல்-பொருளாற் பிறர்க்கு நன்மையைக் கொடுத்து இனிமைப்பண்பினீங்காத சொல். எ - று.

நீதி உலகத்தோடு பொருந்துதல். பண்பென்பது ஈண்டாகுபெயரத்தான் இனிமைமேனின்றது. தலைப்பிரிதல் ஒருசொன்னீர்மைத்து.

கூஅ சிறுமையு ணீங்கிய வின்சொன் மறுமையு
மிம்மையு மின்பந் தரும். அ.

இ - ள். சிறுமையுள் நீங்கிய இன்சொல் - பொருளாற் பிறர்க்கு நோய்செய்யாத இனியசொல்—மறுமையும் இம்மையும் இன்பம் தரும் - ஒருவனுக்கு இருமையினும் இன்பத்தைப் பயக்கும். எ - று.

---

* நாலடியார், அறவு—விளக்குப் புகவிருள் மாய்ந்தாங் கொருவன்—தவத்தின்முன் னில்லாதாம் பாவம்—விளக்குநெய்—தேய்விடத்துச் சென்றிருள் பாய்ந்தாங்கு நல்வினை—தீர்விடத்து நிற்குமாந் தீது.

மறுமையின்பம் பெரிதாகலின், முற்கூறப்பட்டது. இம்மையின்பமாவது உலகம் தன்வயத்ததாகலான் நல்லனவெய்தி இன்புறுதல். இவையிரண்டுபாட்டானும் இருமைப்பயனும் ஒருங்கெய்துதல் வலியுறுத்தப்பட்டது. (௮)

௯௯. இன்சொ லினிதீன்றல் காண்பா னெவன்கொலோ
வன்சொல் வழங்கு வது. ௯.

இ — ள். இன்சொல் இனிது ஈன்றல் காண்பான்-பிறர் கூறிய இன்சொற்றனக்கின்பம் பயத்தலை அநுபவித்தறிகின்றவன்—வன்சொல் வழங்குவது எவன்கொல் - அது நிற்கப் பிறர்மாட்டு வன்சொலைச் சொல்லுவது என்னபயனை கருதி! எ - று.

இனிதென்றது வினைக்குறிப்புப்பெயர். கடுஞ்சொற் பிறர்க்குமின்னாதாகலின், அது கூறலாகாதென்பது கருத்து. (௯)

௧00. இனிய வுளவாக வின்னாத கூறல்
கனியிருப்பக் காய்கவர்ந் தற்று. ௧0.

இ — ள். இனிய உளவாக இன்னாத கூறல் - அறம் பயக்கும் இனியசொற்களும் தனக்குளவாயிருக்க அவற்றைக் கூறாது பாவம் பயக்கும் இன்னாதசொற்களை ஒருவன் கூறுதல்—கனி இருப்பக் காய் கவர்ந்தற்று - இனிய கனிகளும் தன்கைக்கணுளவாயிருக்க அவற்றை நுகராது இன்னாத காய்களை நுகர்ந்ததனோடொக்கும். எ — று.

கூறலென்பதனாற் சொற்களென்பது பெற்றும். பொருளை விசேடித்து நின்ற பண்புகள் உவமைக்கண்ணுஞ்சென்றன. இனியகனிகளென்றது ஔவையுண்ட நெல்லிக்கனி * போல அமிழ்தாவனவற்றை. இன்னாதகாய்களென்றது காஞ்சிரங்காய்போல நஞ்சாவனவற்றை. கடுஞ்சொற்சொல்லுதல் முடிவிற்றனக்கே யின்னாதென்பதாம். இவையிரண்டுபாட்டானும் இன்னாதகூறலின் குற்றங் கூறப்பட்டது. (௧0)

* சிறுபாணாற்றுப்படை, மால்வரைக்—கமழ்பூஞ் சாரற் கவினிய நெல்லி—யமிழ்துவிளை தீங்கனி யௌவைக் கீந்த—வுரவுச்சி னங் கனலு மொளிதிகழ் நெடுவே—லரவக்கடற் றானை யதிகனும்

. புறநானூறு, ௯௧, தொன்னிலைப்—பெருமலை விடரகத் தருமிசை கொண்ட—சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா—தாத னின்னகத் தடக்கிச்—சாத னீங்க வெமக்கீத் தனையே.

## கக ம் அதி.—செய்ந்நன்றியறிதல்.

அஃதாவது தனக்குப் பிறர் செய்த நன்மையை மறவாமை. இனியவை கூறி இல்லறம் வழுவாதார்க்கு உய்தியில் குற்றம் செய்ந்நன்றி கோறலேயாகலின், அதனைப் பாதுகாத்துக் கடிதற்பொருட்டு, இஃதினியவைகூறலின்பின் வைக்கப்பட்டது.

**௧0௧. செய்யாமற் செய்த வுதவிக்கு வையகமும்**
**வானகமு மாற்ற லரிது. ௧.**

இ — ள். செய்யாமல் செய்த உதவிக்கு - தனக்கு முன்னொருதவிசெய்யாதிருக்க ஒருவன் பிறனுக்குச் செய்தவுதவிக்கு—வையகமும் வானகமும் ஆற்றல் அரிது - மண்ணுலகும் விண்ணுலகும் கைம்மாறாகக் கொடுத்தாலும் ஒத்தலரிது. எ — று.

கைம்மாறுகளெல்லாம் காரணமுடையவாகலின், காரணமில்லாத உதவிக்கு ஆற்றாவாயின. செய்யாமைச் செய்தவுதவியென்று பாடமோதி, மறித்துதவமாட்டாமையுள்ளவிடத்துச் செய்தவுதவியென்றுரைப்பாருமுளர். (௧)

**௧0௨. காலத்தி னாற்செய்த நன்றி சிறிதெனினு**
**ஞாலத்தின் மாணப் பெரிது. ௨.**

இ — ள். காலத்தினால் செய்த நன்றி - ஒருவனுக்கு இறுதிவந்தவெல்லைக்கண் ஒருவன் செய்தவுபகாரம்—சிறிது எனினும் ஞாலத்தின் மாணப் பெரிது - தன்னை நோக்கச் சிறிதாயிருந்ததாயினும் அக்காலத்தை நோக்க நிலவுலகத்தினும் மிகப்பெரிது. எ - று.

அக்காலநோக்குவதல்லது பொருணோக்கலாகாதென்பதாம். காலத்தினாலென்பது வேற்றுமை மயக்கம். (௨)

**௧0௩. பயன்றூக்கார் செய்த வுதவி நயன்றூக்கி**
**னன்மை கடலிற் பெரிது. ௩.**

இ — ள். பயன் தூக்கார் செய்த உதவி நயன் தூக்கின் - இவர்க்கு இது செய்தால் இன்னது பயக்குமென்று ஆராய்தலிலராய்ச் செய்தவுதவியாகிய ஈரமுடைமையை ஆராயின்—நன்மை கடலிற் பெரிது - அதனன்மை கடலினும் பெரிதாம். எ — று.

இவை மூன்றுபாட்டானும் முறையே காரணமின்றிச் செய்ததூஉம், காலத்தினாற் செய்ததூஉம், பயன்றூக்காராய்ச் செய்ததூஉம் அளவிலவாதல் கூறப்பட்டது. (௩)

க0ச. திணைத்துணை நன்றி செயினும்பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார். ச.

இ — ள். திணைத்துணை நன்றி செயினும்-தமக்குத் திணையளவிற்றாய உபகாரத்தை ஒருவன் செய்தானாயினும்,—பனைத்துணையாக் கொள்வர் பயன் தெரிவார் - அதனை அவ்வளவிற்றாகக் கருதாது பனையளவிற்றாகக் கருதுவர் அக்கருத்தின்பயன்றெரிவார். எ — று.

திணை பனையென்பன சிறுமைபெருமைகட்குக் காட்டுவன சிலவளவை. அக்கருத்தின் பயனாவது அங்ஙனங் கருதுவார்க்கு வரும் பயன. (ச)

க0ரு. உதவி வரைத்தன் றுதவி யுதவி
செயப்பட்டார் சால்பின் வரைத்து. ரு.

இ — ள். உதவி உதவிவரைத்து அன்று - கைம்மாறாகவுதவி காரணத்தானும் பொருளானுங் காலத்தானுமாகிய மூவகையானும் முன்செய்த உதவியளவிற்றன்று;—உதவி செயப்பட்டார் சால்பின் வரைத்து - அதனைச் செய்வித்துக்கொண்டவர்தம் அமைதியளவிற்று. எ — று.

சால்பு எவ்வளவுபெரிதாயிற்று உதவியும் அவ்வளவு பெரிதாமென்பார், சால்பின் வரைத்தென்றார் இவையிரண்டுபாட்டானும் மூன்று மல்லாத வுதவிமாத்திரமும் அறிவார்க்குச் செய்தவழிப் பெரிதாமென்பது கூறப்பட்டது. (ரு)

க0சு. மறவற்க மாசற்றார் கேண்மை துறவற்க
துன்பத்துட் டுப்பாயார் நட்பு. சு.

இ — ள். துன்பத்துள் துப்பு ஆயசர் நட்புத் துறவற்க - துன்பக்காலத்துத் தனக்குப் பற்றுக்கோடாயினாரது நட்பை விடாதொழிக;—மாசு அற்றார் கேண்மை மறவற்க - அறிவொழுக்கங்களிற் குற்றமற்றாரது கேண்மையை மறவாதொழிக. எ — று.

கேண்மை கேளாந்தன்மை. இம்மைக்குறுதிகூறுவார் மறுமைக்குறுதியும் உடன்கூறினார். (சு)

க0எ. எழுமை யெழுபிறப்பு முள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு. எ.

இ — ள். தங்கண் விழுமம் துடைத்தவர் நட்பு - தங்கணெய்திய துன்பத்தை நீக்கினவருடைய நட்பினை—எழுமை எழுபிறப்

